

# எரிதழல் கொண்டு வா

**தாழை.இரா.உதயநேசன்**

எரிதழல் கொண்டு வா | தாழை.இரா.உதயநேசன்

'எரிதழல் கொண்டு வா' என 'பாரதியின் வரியையே' தலைப்பாக்கிக் கொண்டிருக்கிற இந்தக் கவிதைத் தொகுப்பு, ஐயா அவர்களின் ஆழ்ந்தகன்ற உள்ளத்தின் அனுபவப் பெரும் பரப்பை அழகியலோடு உணர்த்துகிறது.

இயற்கை மீதான நேசமும், சமுதாய அக்கறையும், அன்பின் பெருக்காய்ப் பீறிடும் எல்லை மீறாத காதலும், கிராமியப் பற்றும் இவரது கவிதைகளில் அதிகமாய் இடம்பிடித்திருப்பது பெரும் பெருமைக்குரியதாகும். இந்தத் தொகுப்பில் இருக்கும் 33 கவிதைகளும், இனிதாகச் சுடர்ந்தும், சுகமாக மணந்தும் இதயத்தைக் கட்டிப்போடுகின்றன.

**கவிமாமணி ஆரூர் தமிழ்நாடன்,**
**சென்னை.**

தாழை இரா.உதய நேசன் அவர்களும் வட அமெரிக்காவுக்கு தொழில் நிமித்தமாக புலம்பெயர்ந்தாலும். தமிழ்த் தொண்டாந்துவதை முழுமூச்சாக செய்துவருகிறார். உலக முத்தமிழ் கூட்டமைப்பு மற்றும் அமெரிக்க முத்தமிழ் குழுமங்களின் நிறுவனராக இருந்து தமிழ்ச் சமுதாயத்திற்கு காக அவர் ஆற்றிவரும் பணிகளைப் பாராட்டுகிறேன் என்று ஒற்றை வார்த்தையில் சொல்லிவிட்டுப்போக முடியாது.

தனது கவிதைகளால் எரிதழலைக் கொண்டுவருகிறார்.

**நந்தவனம் சந்திரசேகரன்**
**ஆசிரியர், இனிய நந்தவனம் மாத இதழ்**
**திருச்சிராப்பள்ளி**



**தாழை.இரா.உதயநேசன்**


9 788119 372713

| நூல் தலைப்பு | Book Title |
| --- | --- |
| **எரிதழல் கொண்டு வா** | **Yerithazhal Kondu Vaa**(poem) |
| நூல் ஆசிரியர் | Author |
| **தாழை.இரா.உதயநேசன்** | **Thazhai. R. Udhayanesan** |
| நூல் வகை | Book |
| **தெம்மாங்குக் கவிதைகள்** | **Melody poetry** |
| முதற்பதிப்பு | First Edition |
| **2023** | **2023.** |
| நூல் அளவு | Size |
| **1/8 டெம்மி** | **Demy** |
| பக்கங்கள் | Pages |
| **100** | **100** |
| உரிமை | Copyrights |
| **ஆசிரியருக்கு** | **Author** |
| நூல் வடிவமைப்பு | Book Layout |
| **ம.சேவியர்** | **M.Xavier** |
| விலை | Price |
| **120** | **$8** |
| அச்சு | Print |
| **டுடே கிராபிக்ஸ்,சென்னை** | **Today Graphics,Chennai** |

**ISBN NO : 978-81-19372-71-3**

## வெளியீடு / புத்தகம் கிடைக்குமிடம்




**கலை உதயம் பதிப்பகம்**
**எண்:10, முதல் தெரு, ஸ்ரீராமபுரம்,**
**ஆம்பூர்–635802.**
**திருப்பத்தூர் மாவட்டம்.தமிழ்நாடு**
**தொடர்புக்கு: 95978 64183**
**E.Mail : kalaiudhayampublisher@gmail.com**

## Publisher

**6643,Locust Grove Dr.Indianapolis,**
**Indiana - 46237,USA**
**Cell 317 4082356**
**rajiudhay@gmail.com**

# உச்சியில் பறக்கும் கவிதைக் கொடி

உலக முத்தமிழ்க் கூட்டமைப்பு மற்றும் அமெரிக்க முத்தமிழ்க் குழுமங்களின் நிறுவனரும் தலைவருமான தமிழ்மாமணி முனைவர் தாழை. இரா.உதயநேசன் அவர்களின், இலக்கிப் பணிகளும் சமூகப் பணிகளும் அளப்பரியது.

அதிலும் அமெரிக்க மண்ணில் தம் குடும்பத்தோடு கால் நூற்றாண்டுகளுக்கு மேலாய் வசித்துவருகிற போதும், தமிழையும் தமிழ்மண்ணையும் மறவாமல், உலக அரங்கில் அவர் பெருமிதத்தோடு தமிழ் படைப்பிலக்கியத்தை ஏந்தி நடப்பது மிகுந்த பாராட்டுக்குரியது.

ஓய்வெடுக்க நேரமின்றி பல தளங்களிலும் பரபரப்பாக இயங்கிவரும் தமிழ்மாமணி ஐயா அவர்கள், உறங்குவதற்கும் உண்ணுவதற்கும் கூட சரிவர நேரம் ஒதுக்குவதில்லை. இது குறித்த கவலையை அவரிடமே பலமுறை தெரிவித்திருக்கிறேன். இந்த நிலையிலும் அவர் கவிதைகளையும் கதைகளையும் எழுதிக் குவித்துக்கொண்டே இருக்கிறார் என்றால், அவருக்கான அந்த இலக்கிய நேரம் எங்கே இருக்கிறது? என்கிற திகைப்பு இதயத்தில் ஏற்படுகிறது.

“எரிதழல் கொண்டு வா”என “பாரதியின் வரியையே” தலைப்பாக்கிக் கொண்டிருக்கிற இந்தக் கவிதைத் தொகுப்பு, ஐயா அவர்களின் ஆழ்ந்தகன்ற உள்ளத்தின் அனுபவப் பெரும் பரப்பை அழகியலோடு உணர்த்துகிறது.

எளிய நடையில் எல்லோருக்கும் புரிகிற மாதிரி மலர்ந்து வருவது இவருடைய கவிதைகளுக்கு இருக்கும் சிறப்பாகும். இயற்கை மீதான நேசமும், சமுதாய அக்கறையும், அன்பின் பெருக்காய்ப் பீறிடும் எல்லை மீறாத காதலும், கிராமியப் பற்றும் இவரது கவிதைகளில் அதிகமாய் இடம்பிடித்திருப்பது பெரும் பெருமைக்குரியதாகும். இந்தத் தொகுப்பில் இருக்கும் 33 கவிதைகளும், இனிதாகச் சுடர்ந்தும், சுகமாக மணந்தும் இதயத்தைக் கட்டிப்போடுகின்றன.

“வீரம் மிகுந்த தாயத்திரு நாடு” என தாய் மண்ணை பெருமிதத்தோடு விளிக்கும் தமிழ்மாமணி அவர்கள், “வழக்கம் மறந்தது எரிதழல் கொண்டு வா” என்கிறார். இந்த மண், தன் வழக்கமான வீரத்தை மறந்துவிட்டது என்கிற கவலை, இந்த வரிகளில் வெளிப்படுவது கருதத்தக்கது.

அவர் விரும்பும் எரிதழல், பெண்ணடிமைத் தனத்தை எரிக்கவும், குடிவெறியைச் சாம்பலாக்கவும், வன்முறையைக் கருக்கவும், வஞ்சகத்தைப் பொசுக்கவும் தேவையாய் இருப்பதை, அவருடைய அந்த முதல் கவிதை வீறுகொண்டு பிரகடனம் செய்கிறது. இதைப் படிக்கும் போதே மனம் நெஞ்சை நிமிர்த்துகிறது.

தமிழ்மாமணி ஐயா அவர்கள், “அன்பில் விளைந்த ஆருயிர் மகள்’ என்கிறார். ஆசானை “அகரம் சொன்னவன்; சிகரன் ஆனவன்” என்று படம் பிடிக்கிறார். “கைகால் அசைவில் மயில்கள் தோற்கும்” என்று பிள்ளைகளின் அழகில் உருகுகிறார். “மூன்றெழுத்து மந்திரம்” என்று அப்பாவை உயர்த்துகிறார். “அம்மா என்பது அதிசயம் அன்றோ?” என தாய்க்கு ஆராதனை செய்கிறார். இப்படி உறவுகளைக் கொண்டாடிக் கூத்தாடும் அவருடைய மனோபாவம்தான், மானுட சமுத்திரத்தில் அவரை இரண்டறக் கலந்து நிற்க வைக்கிறது.

இந்தத் தொகுப்பில் பல்வேறு தலைப்புகளில் சிறந்த கவிதை விருந்தை படைத்திருக்கும் ஐயா தமிழ்மாமணி உதயநேசன் அவர்களை, எப்போதும் மாறாத நேசத்தோடு வாழ்த்துகிறேன்.

உங்கள் கவிதைக்கொடி தமிழ் இலக்கியக் கோட்டையின் உச்சியில், விண்ணளாவப் பறக்கிறது. தொடர்ந்து எழுதுங்கள்; ஏனெனில், தமிழர்கள் இன்னும் முழுமையாய் எழுவேண்டி இருக்கிறது.

அன்பான வாழ்த்துக்களோடு,

**ஆரூர் தமிழ்நாடன்**

10.10.2023

# வாழ்த்துரை

உண்மைக் கவிஞன் யார்? வெறும் எதுகை மோனையுடன் கூடிய சொல் அடுக்குகளைப் பாடுவதும் ஒரு ஈற்றடியை வைத்து வெண்பாவைப் பூர்த்தி செய்வதும் பழக்கம் காரணமாகப் பலரும் செய்யக்கூடும். ஆனால் யார் ஒருவர் இதயத்திலிருந்துகவிதை,வற்றாதஊற்றுப்பெருக்கு போல் சிறந்த நோக்கத்துடனும் கொள்கையுடனும் ஆவேசத்துடனும் வெளி வருகிறதோ, அவரே உண்மையான கவிஞர். இதைத்தான் “முன்னைக் கவிதை வெறி” என்கிறார் பாரதியார்.

அதேபோலான ஒரு கவிதையின் வெறிதான், தம் மனதின் ஆழத்திலிருந்து வெளிப்படும் கருத்துக்களாக, இதய ஆவலும் உணர்ச்சி வேகமும் ததும்பி நிற்பவை தான், அமெரிக்க முத்தமிழ் பல்கலைக்கழகத்தின் வேந்தர் தமிழ் மாமணி. தாழை.இரா. உதயநேசன் அவரது கவி வரிகள். இவை “எரிதழல் கொண்டு வா” என்ற புத்தகம் மூலம் வெளிப்பட்டிருக்கின்றன.

“ எழுச்சி மறந்து ஏழ்மையைத் தழுவி
இறக்கம் கண்டது … எரிதழல் கொண்டு வா”

என்னும் கவி வரிகள் பீறிட்டுக் கொண்டு ஆவேசத்துடன் எழுகின்றன.

“ மகள் என்னும் மகா சக்தி” யில்

“தந்தை நெஞ்சில் முழுதாய் நிறைவாள்
சிந்தை அதிலே சந்தமாய் ஒலிப்பாள்
நிந்தை நீக்கும் பந்தமாய் வருவாள்
விந்தை புரிந்து வியப்புகள் தருவாள்”

கனிந்த நெஞ்சம், ஒளி வீசும் தெளிவாக அறிவு, தமிழ் பாசம், புதுமையின் சிசு, எளிய நடை ,பண் பொங்கும் ஒலி, இவ்வாறு தமது கவிதை வரிகளால் நம் இதயத்தைக் கவர்கிறார் தமிழ் மாமணி. தாழை.இரா. உதயநேசன் அவர்கள்.

தான் சொல்ல நினைப்பதை உயிரோட்டத்தோடு மற்றவர் உணர்வுகளைத் தூண்டும் கவிகளாக இவரது கவி வரிகள் அமைந்துள்ளன.

“காட்சி வழியே ஓவியம் பேசும்
மீட்டும் வீணையில் விரல்கள் பேசும்
ஆட்டும் ஒலியில் சலங்கை பேசும்
கற்பனை வழியே கவிகள் பேசும்”

என்னும வரிகள் தாம் அவை.

இவ்வாறு கடல் அலையாய் உன் நினைவுகள், காதல் வானிலே, சிறகுகள் விரித்திடு எனப் பட்டியல் நீண்டுகொண்டே போகிறது.

இப்படியாக இந்தப் புத்தகம் முழுவதும் இடம் பெற்றிருக்கும் கவிதைகள் கவிஞரின்

சொல்லியலையும், வாக்கு இயலையும் மிக நன்றாக விளக்குகிறது. கவி வரிகளில் குதூகலம் வழிந்தோடுகிறது.

“புனித உலகம் புதிதாய் வேண்டும்” எனறு புத்துலகு பொலிவோடு, அன்பு நிறைந்த அகிலம் வேண்டுவது, அவரது பரந்த சமுதாயப் பார்வையை எடுத்துக்காட்டுகிறது.

“இயலாதென்று தவிர்த்து விடாது
முயலும் பெண்கள் முன்னே வா”

என்ற “மீண்டும் பிறந்து வா பாரதி” கவிதை, ஒளியால் மிளிர்கிறது.

மொத்தத்தில் கவிஞரின் கவி வரிகளில் சிறுமை எல்லாம் மறைகிறது ஆற்றல் பெருகி ஆனந்தக் கடலில் சங்கமம் ஆகிறது. அழகு, பதிவு , மெய்யறிவு ஆகிய மூன்று பாதைகளின் வழியாகத் தம் அனுபவங்களை எல்லாம் தெளிந்த எளிய உயிர்த் தமிழிலே வடித்து ஒரு மொழி மண்டபமே கட்டி இருக்கிறார் தமிழ் மாமணி. தாழை.இரா. உதயநேசன் அவர்கள். இதுபோல் அவர் மென்மேலும் கவிகள் படைத்து அடுத்த தலைமுறைக்குத் தமிழின் பெருமைகளைக் கொண்டு செல்ல உளமாற வாழ்த்துகிறேன்

**கவிஞர் டாக்டர் இரா. உமாபாரதி**
**மகாகவி பாரதியின் வம்சாவளி**

வாழ்த்துகளுடன்

# சிந்திக்கத் தூண்டும் சொற்கள்

மொழிப்பற்று என்பது குறுதியோடு கலந்திருக்கவேண்டும். பொருளாதாரத் தேடலுக்காக தமிழர்கள் பல தேசங்களுக்கு புலம்பெயர்ந்திருந்தாலும். மொழியின்மீதும், கலாசாரத்தின் மீதும் மாறாதா பற்றுடன் தமிழ்ப்பணியாற்றி வருகின்றனர்.

முனைவர் தாழை இரா.உதய நேசன் அவர்களும் வட அமெரிக்காவுக்கு தொழில் நிமித்தமாக புலம்பெயர்ந்தாலும். தமிழ்த் தொண்டாந்துவதை முழுமூச்சாக செய்துவருகிறார். உலக முத்தமிழ் கூட்டமைப்பு மற்றும் அமெரிக்க முத்தமிழ் குழுமங்களின் நிறுவனராக இருந்து தமிழ்ச் சமுதாயத்திற்குகாக அவர் ஆற்றிவரும் பணிகளைப் பாராட்டுகிறேன் என்று ஒற்றை வார்த்தையில் சொல்லிவிட்டுப்போக முடியாது. புலம்பெயர்ந்தோம், பொருளீட்டினோம் என்றில்லாமல் மொழி வளர்ச்சிக்காகவும், தன்னால் இயன்றதைச் செய்ய வேண்டும் என்று ஓய்வின்றி உழைக்கும் இவரை வியப்போடு பார்க்கிறேன்.

தமிழ்ப்பற்றாளர் என்பதோடு மட்டுமல்லாமல் தன்னை ஒரு படைப்பாளனாகவும் பரிணமித்துக்கொண்டது இவருக்குக் கிடைத்த இன்னொரு பெருமை. தனது கவிதைகளால் எரிதழலைக் கொண்டுவருகிறார்.

தமிழர்கள், விரத்தையும், கலாசாதத்தையும், மனிதநேயத்தையும், பெண்ணியத்தையும், மொழிப்பற்றையும் இழந்து வருவதை எரிதழால் சுட்டுகிறார்.

மகாகவி பாரதியின் பெருங்கோபத்தை இவரது கவிதைகளிலும் காணமுடிகிறது. இவரது ஒவ்வொரு சொற்களும் வாசிப்பாளரை சிந்திக்க வைக்கும் என்ற நம்பிக்கை தெரிகிறது, வாழ்த்துகள்

**நந்தவனம் சந்திரசேகரன்**

**ஆசிரியர், இனிய நந்தவனம் மாத இதழ்**

**திருச்சிராப்பள்ளி**

**நாள் 16-10-2023**

**என்னுரை:**

# எரிதழல் கொண்டுவா

"ஞானச்செருக்கும் கவிதை முறுக்கும்

என்றும் அவனுக்கே சொந்தம்"

மகாகவி பாரதி என்றாலே அனல் பறக்கும். பாரதியார் வாழ்ந்த காலத்தில் மட்டுமல்ல, இந்த இருபத்தியோராம் நூற்றாண்டிலும் ஒருவரின் உள்ளத்தில் அவனது பாட்டுகள் அனல் மூட்டும். எட்டயபுரத்து எரிமலையாகவே வாழ்ந்த பாரதி, கேட்டாலே உந்துதல் கொடுக்கும் வரிகளால் சொல்லி அடித்தவன்.

"தேடு, கல்வி இல்லாத ஊரை தீக்கிரையாக்கு"

"மாதர்தமை இழிவு செய்யும் மடமை கொளுத்துவோம்"

"இது பொறுப்பதில்லை தம்பி எரிதழல் கொண்டு வா"

“தனி ஒருவனுக்கு உணவில்லை எனில் ஜகத்தினை அளித்திடுவோம்” – என்று பாரதியின் அனல் கக்கும் வரிகள் தொடர்ந்து கொண்டே செல்கின்றன. பயம் என்ற சொல்லிற்கு, அவன் அகராதியில் எங்குமே அர்த்தம் இல்லை. மனம் போன போக்கில் ஏதோவொன்றை அவன் பாடவில்லை. தான் கூறும் வார்த்தைக்கும் வாழ்க்கைக்கும் இடைவெளி விழாமல் பார்த்துக்கொண்டவன் பாரதி.

நாட்டிற்கும், நாட்டில் மலிந்து கிடந்த கேட்டிற்கும், பெண்ணிற்கும் விடுதலை வேண்டி, வார்த்தை எனும் வாளைத் தன் கரங்களில் ஏந்தியவன் என்றால் அது மிகையில்லை. பராசக்திக்கே சவால் விட்டவன் என்றால், யார் அவனது கோபத்திற்கு முன் நிற்க முடியும்? பாரதியின் வேண்டுதல், விருப்பம் இவற்றில் கொஞ்சமேனும் இன்று நிறைவேறியுள்ளது என்றே சொல்லலாம். கல்வி, பதவி, அரசியல் மற்றும் விளையாட்டு என்று எல்லாத் துறைகளிலும் தடம் பதித்துள்ள பெண்களைப் பார்ப்பதற்காகவே, மகாகவி மீண்டும் பிறந்து வர வேண்டும் என்பது என் உள்ளத்தின் ஏக்கம்.

நான் மரபுக் கவிஞனும் இல்லை. புதுக் கவிஞனும் இல்லை. ஹைக்கூ வித்தகனும் இல்லை. பாரதி போல் சொல் வித்தை அறிந்தவனுமில்லை. எனினும், மேற்கண்ட வரிகளால் தாக்கம் அடைந்தவன் என்றே சொல்லுவேன். அதன்

வெளிப்பாடாய் உதித்தது தான் இந்த "எரிதழல் கொண்டு வா" நூல்.

இன்னும் நமக்குத் தேவை பாரதி விரும்பிய மாற்றங்களே. உரிமைக்காகத் துணிந்து குரல் கொடுக்கும் வலிமையான சமுதாயம் விரைவில் வரவேண்டும். எல்லா மனிதரும் பாரதியின் உள்ளத்து வேட்கையை தன்னுள்ளத்தில் ஏற்க வேண்டும்.

வளர்ந்து வரும் காலங்களில் நான் பார்த்த சூழ்நிலைகள், காலப்போக்கில் அவற்றில் ஏற்பட்ட சில மாற்றங்கள், இன்னும் மாற்றம் வேண்டும் நிலைகள் என, தனிப்பட்ட ஓர் மனிதனாக நான் அறிந்தவைகளே, இந்நூலில் கவிகளாக வெளிப்பட்டுள்ளது. இந்த நூலை வாசிக்கும் வேளையில், அவ்வித தாக்கம் வாசகர்களுக்கும் கிட்டுமெனில், மிகவும் மகிழ்ச்சியே.

எரிதழல் கொண்டு வா நூலிற்கு மிகவும் சிறப்பாக அணிந்துரை எழுதிய கவிமாமணி ஆரூர் தமிழ்நாடன் எனது நெஞ்சார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொல்கிறேன்.

இந்நூலிற்கு மிகவும் நேர்த்தியாக வடிவமைப்புக் கொடுத்து, அச்சிட்டுக் கொடுத்த டுடே கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கும் என் நன்றிகள் பல.

மகாகவி தந்த தாக்கத்தால் எழுச்சியுற்ற ஆகச்சிறந்த கவிஞர்கள் பலருடன் நானும் இணைந்துப் பயணிக்கும் பேறு பெற்றமையை

எண்ணிமகிழ்கிறேன். இந்நூல்வெளியாகுவதற்குக் காரணமாயிருந்த அத்துனைப் பேருக்கும், நண்பர்களுக்கும், கவிச் சொந்தங்களுக்கும் மனமார்ந்த நன்றிகளை உரிதாக்கிக்கொள்கிறேன். மேலும், எழுத்துலகில் எனக்கு ஆக்கம் கொடுக்கும் எழுத்தாளர்கள் மற்றும் கவிஞர்களுக்கும் நன்றிகள்.

**என்றும் அன்புடன்,**

**தாழை இரா. உதயநேசன்,**

**வட அமெரிக்கா,**

# பொருளடக்கம்

# 1. எரிதழல் கொண்டு வா..!

வீரம் மிகுந்த தாய்த்திரு நாடு
காலந் தோறும் செழித்தநல் நாடு
முழக்கம் கேட்டு மிளிர்ந்த நாடு
வழக்கம் மறந்தது எரிதழல் கொண்டுவா.

வளர்ச்சிக் கண்ட வளமிகு நாடு
கிளர்ச்சிக் கொண்ட கதைகளும் உண்டு
எழுச்சி மறந்து ஏழ்மையைத் தழுவி
இறக்கம் கண்டது எரிதழல் கொண்டுவா.

பெண்ணவள் பெருஞ்சக்தி என்ற நாடு
பெண்மைப் போதையாய் மாற்றிய கூட்டம்
அடுப்பின் அடியில் முடக்க நினைக்கும்
கயவர் எரிக்கவே எரிதழல் கொண்டுவா.



கெடுக்கும் குடியை விடுக்க நினை
வெறுத்து ஒதுக்கும் உலகம் உனை
தன்னிலை மறந்து தள்ளாடும் கூட்டம்
திடமாய் நிற்கவே எரிதழல் கொண்டுவா.

அழியும் நிலையில் அழகிய குடும்பம்
வன்முறைக் கண்டு பயந்து ஒடுங்கும்
குருதிச் சிந்திப் பிழைக்கும் கூட்டம்
உருவாக்கும் கயமை உடைக்க வா.

பட்டம் பெற்று பலன் எங்கே
வட்டம் போட்டுப் பேசுவார் நன்றே
எட்டாக் கனியாய் வேலை வாய்ப்பு
தவிடு பொடியாக்க எரிதழல் கொண்டுவா.

ஏங்கித் தவித்தது போதும் தோழா
புறப்படு நீயே புதுமை பெறவே
உனக்கென வழிகள் உருவாக்கிச் செல்ல
ஏந்துவாய் எரிதழல் உன்கையில் இன்று.

நெஞ்சம் நிமிர்த்தி நிலையாய் நின்று
வஞ்சக வழிகள் வேருடன் களை
பிரித்துப் பார்க்கும் சாதிக் கொடுமை
விரட்டி அடிக்க எரிதழல் பிடி.



இணையம் என்றார் இன்பம் மறந்தார்
அணைக்கும் குணங்கள் அறவே துறந்தார்
அழுத்தம் என்றே மனதை இழந்தார்
தலைமுறை மீளவே எரிதழல் கொண்டுவா.





# 2. மகளெனும் மகாசக்தி

அன்பில் விளைந்த ஆருயிர் மகள்
புன்னகைப் புரியும் தோட்டத்து மலர்
என்னுயிரில் துளிர்த்த உறவு இவள்
மகிழ்ச்சி அளிக்கும் மல்லிகை போன்றவள்.

பாசத்தின் உருவில் பாங்காய் வந்தவள்
வாசமுள்ளப் பூங்கொடி அன்னை ஆனவள்
நேசம் பொழிந்து நெஞ்சில் நிலைத்து
நெடுவாழ்வின் நீங்க சொந்தம் இவள்.

தந்தை நெஞ்சில் முழுதாய் நிறைவாள்
சிந்தை அதிலே சந்தமாய் ஒலிப்பாள்
நிந்தை நீக்கும் பந்தமாய் வருவாள்
விந்தை புரிந்து வியப்புகள் தருவாள்.



- முனைவர் தாழை.இரா.உதயநேசன்

மழலை மொழியில் இன்பம் விதைப்பாள்
கொஞ்சிப் பேசி  கோபம் குறைப்பாள்
குடும்பம் என்னும் கூட்டில் – அவளால்
உயிரும் துடிப்பும் ஒன்றாய் நிற்கும்.

பம்பரம் போலே வளைய வருபவள்
முல்லைப் பூவின் மென்மை கொண்டவள்
கனிவுப் பேச்சில் உள்ளம் உருக்கி
வருத்தம் வரினும் விழிநீர்த் துடைப்பாள்.

சட்டம் எல்லாம் மகள்மொழி  தானே
வட்டம் போல சுழல வைப்பாளே
பட்டம் பெற்ற பாவை அவளும்
பெற்றவர் தலைகள் நிமிரச்செய்வாள்.

முற்றம் நடுவே முழுநிலா தானே
பெற்றவர் பிணக்கிலே பாலம் தானே
உறவுகள் சூழ உற்சாகம் தருவாள்
கவலைப் போக்கும் வடிகால் அவளே.

கோபம் மிஞ்சும் பொழுதுகள் எல்லாம்
உதட்டோரச் சிரிப்பிலே மயக்கம் தருபவள்
அன்னைக்கு உதவும் முத்தானப் பெண்ணிவள்
தகப்பன் நெஞ்சில் அமர்ந்தவள் தானே.



வளையின் ஓசையும் கால்கொலுசு நாதமும்
வளைந்தாடும் அவளின் விழியோரப் பார்வையும்
மகள் வடிவிலே மூவெழுத்து மந்திரமும்
மானுடர் பெற்ற மாபெரும் வரமே.





# 3. இரும்புப் பெண்மணி இந்திரா..!

கங்கை யமுனை சங்கமம் ஆகும்
அலகா பாத்தின் ஆனந்த பவனம்
பிறந்தார் அங்கே நேருவின் மகளாம்
அஞ்சா நெஞ்சின் அழகிய வடிவாம்.

குழந்தைப் பருவம் உயிரில் கலந்த
சுதந்திர உணர்வுகள் போராட்ட விதைகள்
வானர சேனை அமைப்பாய் மாற
அண்ணல் காந்தியின் அறவழி நடந்தார்.

நிமிர்ந்த நடையும் நேர்கொண்ட பார்வையும்
மலைபோல் தடைகளைத் தகர்த்திடும் துணிவும்
அயரா மனமும் உயர்வாய் எண்ணமும்
உலகம் போற்றும் தலைவர் ஆக்கியது



ஏழ்மை நிலையின் ஆழ்மனம் அறிந்து
சீர்மிகு செங்கோல் ஆட்சி செய்து
உலக அரங்கில் வீரம் கொண்டு
உலா வந்தவர்  இந்திரா அன்னையாம்

இருபது அம்ச திட்டம் வகுத்து
ஏழைக்கு வீடும் கல்வியும் கொடுத்து
விவசாயம் குடிநீர் மேம்பாடு அடைய
நலிவுகள்  போக்கி உயர்வுகள் தந்தார்

வீரம் செறிவு விவேகம் நுணுக்கம்
ஒருங்கே அமைந்த மாசில்லா மாணிக்கம்
சமநிலை அளித்த உந்தன் உதிப்பில்
உருவம் பெற்று நாடும் உயர்ந்தது.

குடிகள் நலனே அரசியல் என்றார்
மக்கள் வளர்ச்சியில் மகிழ்ச்சி கொண்டார்
இடிந்திடும் சமூகம் நிமிர்ந்திட  வைத்தார்
அன்னை இந்திரா மீண்டும் வேண்டும்.



# 4. எது கவிதை..?

உள்ளத்தில் உணர்வை உறைய வைக்கும்
துள்ளும் அலைபோல் எழும்ப வைக்கும்
சொல்லும் சொல்லில் சிலிர்த்திட வைக்கும்
வல்லமை கொண்ட வரிகள் கவியே.

மனதின் வலிக்கு மருந்தாய் அமையும்
இனிமை ததும்பும் இசையாய் அமையும்
இனிக்கும் கரும்பின் சுவையாய் அமையும்
வளமை கொண்ட வரிகள் கவியே.

இயற்கை ரசிப்பில் இன்பம் காணும்
இயம்பும் வார்த்தையின் சுரங்கள் ஆகும்
வியப்பில் பார்க்க விந்தை செய்யும்
இதயம் இழுக்கும் வரிகள் கவியே.



காதல் கவிரசம் கண்கள் பார்க்கும்
ஏக்கப் பார்வையில் எழுத்துகள் தெரியும்
காணும் உலகில் கற்பனைத் தெரியும்
இலக்கியம் அனைத்திலும் கவிகள் தெரியும்.

காட்சி வழியே ஓவியம் பேசும்
மீட்டும் வீணையில் விரல்கள் பேசும்
ஆட்டும் ஒலியில் சலங்கை பேசும்
கற்பனை வழியே கவிகள் பேசும்.

உலர்ந்த எலும்பும் உயிர்பெறச் செய்யும்
புலமை மிகுதியில் புத்துயிர் பெரும்
தளர்ந்த கரங்கள் தாங்கிப் பிடிக்கும்
எவர்க்கும் புரியும் வரிகள் கவியே.

கலையின் அரசி கவிதை என்பேன்
மலையின் காட்சியும் கவிதை என்பேன்
மழலைப் பேச்சும் கவிதை என்பேன்
மனதின் வடிகால் கவிதை என்பேன்.



# 5. எனது ஆசான்..!

அகரம் சொன்னவன் சிகரம் ஆனவன்
ழுகரம் இயம்பி நடைபயில செய்தவன்
சொற்கள் எழுதிப் பேச வைத்தவன்
என்னை இயக்கும் அவனே ஆசான்.

மாற்றம் தந்து ஏற்றம் கொடுத்தான்
போற்றும் துதிக்குப் பொருத்த மானவன்
தோற்கும் எண்ணம் தொலைக்கச் செய்தவன்
ஏற்றம் இறக்கம் ஏற்கச் சொன்னவன்.

வெற்றிப் பெருக்கில் ஆனந்தம் கொள்பவன்
நெற்றி வியர்வையில் நிலைக்க வைப்பவன்
உற்றார் உறவு மதிக்க வைத்தவன்
கற்றப் பாடம் அனைத்திலும் ஆசான்.



முகவரி தந்து முப்பொழுதும் உழைத்து
மாணவர் தம்மை பிள்ளையாய்ச் சுமந்து
தன்னல மில்லா படைப்பின் மகுடம்
எந்நாளும் எந்தன் இறைமை ஆசானே.

அறிவைப் பெருக்கி சிந்தனை வளர்த்து
அகிலம் போற்றும் வாழ்க்கை தந்து
அனைத்தும் பெறவே ஆசிகள் தந்து
அன்புடன் சிரிக்கும் ஆசான் வாழ்க.

மலரத் துடிக்கும் மொட்டுக்கள் அறிந்து
வளரும் வழிகள் நாளும் காண்பித்து
மாணவப் பருவம் மனிதம் விதைக்கும்
தனித்துவ மானுடமே – ஆசானே போற்றி.



# 6. கடல் அலையாய் உன் நினைவுகள்..!

கரைதனைத் தழுவும் கடல் அலைகள்
இரவில் மட்டுமே உதிக்கும் நிலவு
குமுறும் உள்ளத்தின் குழப்ப நிலைகள்
தகிக்கும் ரணங்கள் மனதின் நினைவுகள்.

கலையும் மேகம் நிலைக்க ஏங்கும்
வலையில் சிக்கிய மீனாய்த் துடிக்கும்
விட்டில் பூச்சியாய் கண்ணில் மின்னும்
இதயக் கதவில் உறையும் நினைவுகள்.

பசுமர ஆணியாய்ப் பசுமைக் கொள்ளும்
பசிக்கும் பொழுதில் உணவைத் தவிர்க்கும்
வசிக்கும் தூரம் வெகுவாய் இருந்தும்
நெருக்கம் காட்டும் நெஞ்சின் நினைவுகள்.



மல்லிகை முகரும் வண்டின் மதுவோ
நெருங்க நினைக்கும் புதுமண உறவோ
உறங்கும் பொழுதில் தழுவும் கனவோ
மயக்கம் தருதே மனதின் நினைவுகள்.

எல்லை மீறிக் கோரமாய் எழும்பி
வில்லென வளையும் சுனாமி அலைகள்
காலம் கடந்தும் கண்முன் நின்று
வடுக்கள் கொடுக்கும் வலிய நினைவுகள்.

இரவின் வெளியில் மலர்ந்தப் பூக்கள்
தனிமைப் பொழுதில் நம்முடன் நடக்கும்
இரக்கம் இன்றி இம்சை கொடுக்கும்
நினைவுகள் என்றும் நீங்காச் சொந்தமே.

தாய்மண் ஏக்கம் நீக்கம் கொள்ளாது
பாய்ச்சல் கொண்டு பதுங்கி நிற்கும்
மீண்டும் மீண்டும் மனதை இயக்கும்
நினைவுகள் என்றும் தொப்புள் கொடியே.



# 7. கப்பலோட்டிய தமிழன்..!

சிங்காரத் தமிழன் சிங்கத்தின் உருவம்
செக்கிழுத்தச் செம்மல் செங்குருதிச் சிந்தியவன்
கொத்தளம் கொண்ட கொட்டைகள் தகர்த்து
கப்பல் ஒட்டிய தமிழனும் நீயே.

சட்டம் படித்து இலக்கியம் கற்று
மண்ணின் மைந்தர் விடுபட உழைத்து
திலகரின் போராட்ட எண்ணம் விதைத்து
விடுதலை பெறவே வேட்கைக் கொண்டாய்.

வந்தே மாதரம் என்றே முழங்கி
வந்தாய் நீயும் வீதிகள் குலுங்க
சுதேசி என்றோர் சங்கம் வைத்து
சுதந்திர வேட்கை நெஞ்சில் சுமந்தாய்.



கனவுகள் ஆயிரம் கண்களில் கொண்டாய்
இரட்டை ஆயுள் தண்டனை அடைந்தாய்
இருட்டு அறையிலும் நூல்கள் தந்தாய்
எதிரிகள் உன்னைப் போற்றிட வாழ்ந்தாய்.

சுரண்டல் ஒழிக்கச் சுதந்திரம் கேட்டாய்
திரண்டு எழும்பவே தத்துவம் உரைத்தாய்
தாய்மொழி வழியே கற்கச் சொன்னாய்
தாய்நாடு என்ற இலக்கினைக் கொண்டாய்.

செல்வச் செழிப்பில் பிறந்த திருமகன்
தியாகம் செய்தே புவியில் வாழ்ந்தவன்
காலம் கடந்தும் நினைவில் நின்றவன்
வாழும் நல்லவன் கப்பலோட்டிய தமிழனே.



# 8. காதல் வானிலே..!

குருவிகள் எழுப்பும் குக்கூ சத்தம்
குயில்கள் பாடும் இன்னிசை சத்தம்
சேவல் கூவும் கொக்கரக்கோ சத்தம்
காதல் வானில் பறந்திட அழைக்குதே.

நாணம் நெய்த விழிக்கூடு இரண்டு
காதல் மொழிகள் கிறுக்குதே திரண்டு
தகிக்கும் தாகத்தில் தள்ளியே இன்று
வதனங்கள் உடுத்தி ஊர்வலம் வருகிறாள்.

விழிகள் திறந்து கனவில் பறந்து
ரசித்து மகிழ்ந்த நொடிகள் அழகே
காற்றில் கலந்த நினைவுச் சாரலில்
நனைகிறேன் நானும் இன்பங்கள் கூடுதே.



வறுமைக் கோட்டிலும் நுழைந்தக் காதல்
பொறுமை தனையே போதித்தக் காதல்
சிறகுகள் முளைத்துச் சிட்டாய்ப் பறக்கும்
உறவெனும் வானிலே உள்ளத்துக் காதல்.

சுற்றம் சூழ்ந்தும் உறவுகள் இருந்தும்
காதல் தேவதை நெஞ்சில் நிலைத்தாள்
மலைபோல் தடைகள் தரையெனத் தாண்டி
என்றும் எந்தன் வாழ்வாகி நின்றாள்.

கண்கள் அசைவில் கவலைகள் போக்கி
உதடுகள் பேசும் கதைகளில் மயக்கி
புன்னகைச் சிந்தி பரவசம் அளித்து
கன்னம் நடுவே கருத்தாய் அமர்ந்தாள்.

வயது முதிர்ந்தும் வெள்ளி முளைத்தும்
அன்பின் மாயம் கொண்டது காதல்
உயிரின் இழையில் நூலாய்த் தொடரும்
உலகில் என்றும் காதல் மேன்மையே.

என்முன்னே நிழலாடும் பிம்பம் நீதானே
என்னை ஆட்டுவிக்கும் ஆளுமை தானே
வெற்றிடம் காணாது வேரூன்றி நின்றவளே
சிறகுகள் விரிப்பாய் வானில் பறக்கவே.



ஊன்றும் கைத்தடி உன்னைச் சொல்லும்
தோன்றும் கனவுகள் உன்னைக் காட்டும்
ஏக்கம் அனைத்தும் உன்னைத் தேடும்
தாக்கும் நினைவுகள் காதல் சொல்லும்.



# 9. காவிரிப் படுகை..!

குடகில் பிறந்தவளே பூம்புகாரில் கலப்பவளே
பசுமைப் போர்த்தி நடந்துவரும் காவிரியே
நீஓடும் அழகில் நெஞ்சம் நிறைந்து
பாயும் திசையெங்கும் பூமி குளிரும்.

மண்ணின் முதுகெலும்பு விளையும் பூமியாம்
காவிரிப் படுகையில் அமைந்திட்ட ஊர்களாம்
கபினியும் நொய்யலும் மணிமுத்தும் தோழிகளாம்
அருவி  ஊற்றுகள் ஒருங்கே அமைந்தவளாம்.

வானம் பொய்ப்பினும் பொங்கி எழுவாள்
கரையெங்கும் மக்கள் களிப்போடு காத்திடுவாள்
ஆடியிலே பெருக்கெடுத்து ஆரவாரம் செய்திடுவாள்
வெள்ளமாய்ப் பெருக்கெடுக்க கொள்ளிடம்  திரும்பிடுவாள்



வறண்ட நிலங்கள் வானம் பார்க்க
அனைத்தும் நனைத்து நெஞ்சம் நிறைத்து
அணைகள் ஆறுகள் ஏரிகள் நிரப்பி
தாகம் தீர்த்து உயிர்கள் காப்பாள்.

நாற்றங்கால் நடுவிலே அலைபோல் அசைவாள்
பசிப்போக்கும் பயிர்தனைப் பாலூட்டி வளர்ப்பாள்
பசுங்கதிர் செழிப்பில் மயங்கிய பொன்னியும்
களஞ்சியம் முழுவதும் கதிரால் நிறைப்பாளே.

உழவன் மனதில் மகிழ்ச்சி நிரப்பி
வளங்கள் கொடுத்து வாழ வைத்தவள்
வானம் பொய்க்க வஞ்சகர் தடுக்க
பெருக்கத்தை மறந்து வாராதே போனதென்ன?

வாரியம் அமைத்துப் போராடிப் பார்த்தும்
வருவாய் என்றே காத்திருந்த கூட்டம்
வளமை இழந்து வலசைப் பறவையாய்
இடம்விட்டுப் பெயரும் அவலம் காணாயோ?

உரிமை நீரால் வறுமை மாறுமோ
விவசாயம் உந்தன் மடிதனில் செழிக்குமோ
அரசியல் வலையில் அழியும் வயல்கள்
அரிசியைக் காக்க நீண்டு வருவாயோ?



வசந்தச் சோலைகள் பாலை ஆகுது
குடிக்கும் நீரும் கேள்விகள் கேட்குது
உழைக்கும் வர்க்கம் உயிரைப் போகுது
உன்னை எதிர்பார்த்து வயதும் ஏறுது.

கண்கள் பார்க்க கரைபுரள வேண்டும்
மண்ணும் வளமும் மீண்டிட வேண்டும்
எண்ணம் ஏக்கம் நிறைவேற வேண்டும்
காவிரித் தாயே மீண்டுவர வேண்டும்.



# 10. கிள்ளை மொழிபேசும் பிள்ளைக்கொரு தாலாட்டு..!

மடிமீது தலைசாய்த்து நீயுறங்கு கண்ணே
தவமாக வந்துதித்த கண்மணியே உறங்கு
செதுக்கி வைத்த சித்திரமே உறங்கு
தோள்மீது சாய்ந்த சொந்தமே உறங்கு.

உன்னை அள்ள மனம் குளிர்கிறேன்
முத்தச் சத்தத்தில் நானும் மிளிர்கிறேன்
உந்தன் தீண்டலில் புதிதாய்ப் பிறக்கிறேன்
புன்னகைக் கண்ணா நீயும் உறங்கு.

நடக்கும் நடையை நானும் ரசிக்கிறேன்
உதிர்க்கும் மழலையில் ஊர்வலம் செல்கிறேன்
சின்னப் பூவே சிரிக்கும் அழகே
கண்கள் மூடி நீயும் உறங்கு.



கைகால் அசைவில் மயில்கள் தோற்கும்
பவளவாய் மொழியில் குயில்கள் மயங்கும்
புன்னகை கண்டு பூக்கள் சிலிர்க்கும்
சின்னக் கண்ணா கண்ணுறங்கு நீயும்.

வானம் ஏறி நிலவைப் பிடிப்போம்
கானம் பாடும் குரல்கள் பார்ப்போம்
மேகக் கூட்டம் தொட்டுப் பாப்போம்
வேகமே நீயும் கண்ணுறங்கு கிள்ளையே.



# 11. சிறகுகள் விரித்திடு..!

துணிந்து நடந்தால் எல்லாம் கூடும்
துன்பங்கள் கூட விலகி ஓடும்
கடந்ததை நினைக்கக் கலக்கம் தோன்றும்
முடங்கிய சிறகை விரித்து எழும்பு.

மூங்கில் துளையில் மயக்கிடும் கீதம்
அனலில் வதைவதைக்க மின்னும் தங்கம்
தயக்கம் கலைந்து உறக்கம் தெளிந்து
வளர்ச்சிகள் நோக்கி சிறகுகள் விரித்திடு.

கனவுகள் இலக்குகள் அருகில் ஓடு
முயற்சிகள் விடாது முன்னேற ஓடு
நம்பிக்கைக் கொண்டு நடக்கப் பழகு
இதயத்தின் சிறகுகள் விரிக்கப் பழகு.



காலம் மாறும் காட்சிகள் மாறும்
வியர்வை நீரும்  விண்ணைத் தொடும்
வெண்ணிலா உந்தன் வாசலில் நிற்கும்
வெற்றி வாகைகள் உன்மேல் வீழும்.

மலைபோல் தடைகள் தொடர்ந்து வந் வந்தும்
பேரிடர் அனைத்தும் அணி வகுத்தும்
துணிந்தவர் எவருக்கும் துயர்கள் இல்லை
சிறகுகள் விரித்திடு வானமே எல்லை.

இலட்சியப் பாதையின் நீளம் பெருகட்டும்
ஆசை  விதைகள் அழகாய் முளைக்கட்டும்
விடா முயற்சி விண்ணைப் பிளக்கட்டும்
சிறகுகள் விரிக்க தடைகள் அகலட்டும்.

மனதில் உறுதி மலைபோல் பெருக்கு
சிந்தை முழுதும் செயல்கள் நிறுத்து
தெளிவும் துணிவும் கண்களில் வளர்த்து
விண்ணைத் தொடவே சிறகுகள் விரித்திடு.



# 12. சீர் வரிசை..!

தாயுடன் பிறந்து தாங்கி நிற்பான்
உள்ளம் முழுதும் அன்பை விதைப்பான்
எண்ணம் ஏக்கம் அறிந்து இருப்பான்
வளர்க்கும் பொழுதில் தந்தை ஆவான்.

தொட்டில் கட்டும் உரிமை கொண்டான்
விட்டுக் கொடுத்துப் பழகும் நல்லவன்
எட்டுத் திக்கும் எதிரொலி கேட்க
பட்டும் பவுனும் கொடுத்து மகிழ்வான்.

மடியில் அமர்த்தி முடிகள் இறக்கி
மாமன் என்று மகிழ்ச்சி அடைவான்
காதுக் குத்தும் கடமைகள் செய்து
தாய் வீட்டின் மேன்மை உரைப்பான்.



பண்டிகை நாட்கள் பலகாரம் செய்து
உண்டு மகிழ உறவுகள் அழைப்பான்
கண்கள் முழுதும் கருணை நிரப்பி
தன்தோள் சுமைகள் ஏற்று மகிழ்வான்.

பொங்கல் வந்தால் புதுசீர் தருவான்
பொங்கும் மகிழ்வு தன்னில் காண்பான்
எங்கும் ஒலிக்கும் மாமன் குரலில்
தங்கும் இன்பம் தரணியில் நிரந்தரம்.

தாய்க்கு ஈடாம் தாய்மாமன் உறவாம்
தூய்மைக் கொண்ட தூயநல் உறவாம்
போற்றும் தமிழர் பண்பாட்டு உருவாம்
ஊற்றாய் அன்பைப் பொழியும் உறவாம்.

உடன் பிறந்தவளை உயர்வாய் எண்ணி
உரிமைகள் அனைத்தும் தன்னுள் நிறுத்தி
உவகை கொள்ளும் மாமன் உறவு
உலகில் உண்டோ உண்மை சொல்வீர்.



# 13. தித்திக்கும் தீபாவளி..!

காரிருள் வேளையில் தூக்கம் களைந்து
சிரம்தொட்டு கால்வரை எண்ணெய் தேய்த்து
கசடுகள் களைய நன்னீரில் குளித்து
புத்தாடைப் பொலிவில் பிறந்தது தீபாவளி

அதிரடி வேட்டுகள் சிவகாசி சீற்றம்
விதவித பலகாரம் அம்மாவின் பக்குவம்
மழலைகள் ஆட்டத்தில் அன்பு நிறையும்
மகிழ்ச்சிப் பெருக்கும் திருநாள் கொண்டாட்டம்.

காகிதக் கிழிசல்கள் படர்ந்த வீதியில்
கால்தடம் பதித்து நடந்திடும் வேளையில்
மத்தாப்பு வெளிச்சத்தில் மனங்கள் மகிழட்டும்
வெளிச்சங்கள் நடுவிலே விடியல் பிறக்கட்டும்.



தீபங்கள் ஒளியிலே தீமைகள் அகலட்டும்
பரிவோடு பகிர்ந்துண்ணும்  பண்புகள் வளரட்டும்
பேதங்கள் இல்லாது தீபஒளி  எரியட்டும்
எளியவர் வறியவர் உள்ளங்கள் மகிழட்டும்.

சிந்தனைகள் சீராகிக் கொண்டாட்டம் பெருகட்டும்
இடர்கள் அனைத்தும் நொடியினில் மறையட்டும்
இன்பங்கள் பெருகி மனிதம் செழிக்கட்டும்
அன்பு விதைகள் அகிலத்தில் மலரட்டும்.

நல்லாயுள்  ஆரோக்கியம் ஆனந்தம் அத்தனையும்
ஆலம் விருட்சமாய்  வாழ்வில் நிலைக்கட்டும்
தூய்மை எண்ணங்கள் மண்மீதில் விதைத்து
ஏழ்மை  ஒழிக்க  ஏற்றுவோம்  தீபம்.

உயர்வானத் திருநாளாம் பண்டிகைப் பெருநாளாம்
பொன்னான இந்நாளில் இல்லாதோர்
நினைப்போம்
உழைக்கும் வர்க்கம் களிப்படையச் செய்து
தீபத்தின்  ஒளிதனில்  தீமைகள் அறுப்போம்.



# 14. தோழனாய் அப்பா..!

மூன்றெழுத்து மந்திரம் கடமைகள் பிறப்பிடம்
அன்பு அக்கறை இணைந்த இருப்பிடம்
சுயநலம் இன்றி சுமைதாங்கும் கோபுரம்
சோர்வுகள் அறியா சோகத்தின் உறைவிடம்.

ஈரைந்து மாதங்கள் கருவறை வசித்தும்
ஈரமுடன் நெஞ்சில் நாளும் சுமக்கும்
தடுமாறும் வேளை தாங்கிப் பிடிக்கும்
அப்பாவின் தோள்களும் கருவறை தானே.

நொடிப் பொழுதேனும் நிலையாத கோபம்
தோள்மீது தாலாட்டிப் பாசத்தை வளர்க்கும்
ஏக்கம் கொண்டு மழலைக் கொஞ்ச
தூக்கம் மறக்கும் அப்பா வாழ்க.



- முனைவர் தாழை.இரா.உதயநேசன்

மகளுக்கு அதிகாரம் மண்ணில் அளிப்பவன்
அவளுக்கு முதல்வனாய் மண்ணில் உதித்தவன்
பெண்ணின் தோழனாய்ப் பெருமைச் சேர்ப்பவன்
ஆசான் என்றே அழைக்கத் தோன்றும்.

காணா உலகம் காண வைப்பாய்
தீரா சோகம் மறைத்தே நிற்பாய்
ஆறாத காயம் அனைத்தும் துறப்பாய்
அப்பா என்றும் தியாக உருவாம்.

தவறுகள் இழைக்கத் திருத்தி வெல்வாய்
கல்வி அறிவும் கூடவே தருவாய்
பெண்ணுக்குத் தைரியம் ஊட்டி வளர்ப்பாய்
உன்னை மிஞ்சவே உலகில் உறவில்லை.

பிள்ளைகள் வாழ்வு உயர வேண்டி
வாழ்நாள் முழுதும் குனிந்து வாழ்ந்து
ஆயிரம் உறவுகள் அருகில் இருந்தும்
உன்னைத் தேடும் உணர்வைத் தந்தாய்.

வரங்கள் தேடி கோவில் வாசலில்
இருகரம் கூப்பி வேண்டி நின்றோம்
கடவுளே வரமாய் வீட்டில் இருக்க
இகத்தில் இன்னும் வரம் வேண்டுமோ?



# 15. நான் பிறந்த மண்..!

செங்கொண்டைச் சேவல் கூவிடும் வேளை
சில்லென்றப் பனியில் கால்தடம் பதித்து
புற்கள் மேலே பனித்துளி ரசித்து
வயல்வெளி மண்ணில் கால்கள் பதித்தோம்.

தலைசாய்த்து இளைப்பாற தாய்மடி தரும்
மலைகள் சூழ்ந்து சிகரமாய் நிற்கும்
பாலாறு பெருக்கில் மோர்தானா வழிந்தோட
பசுமைகள் நிறைந்த பாசத்தின் பிறப்பிடம்.

விளைந்தக் கதிர்கள் வீட்டில் சேர்த்து
அம்மா அன்பில் அறுசுவை உணவை
வட்டமிட்டு அமர்ந்து அருந்திய நாட்கள்
மீண்டும் கிடைத்தால் நானும் சிறுவனே.



- முனைவர் தாழை.இரா.உதயநேசன்

தேசியக்  கொடியை முதன்முதல் நெய்தோம்
வான்புகழ் வள்ளுவனை உருவமாய் வடித்தோம்
விருதுநகர் காமராசர் வாகைசூட  வைத்த
சிங்கார ஊராம் குடியாத்தம் பேராம்

பசுமை மிகுந்த விளைநிலம் மணக்கும்
பறந்து உலாவும் பறவைகள் உரைக்கும்
நினைவுகள் யாவும் நிழலாய் ஆடும்
இதயத்தின் ஓரம் என்ஊர் நிற்கும்.

செழிப்புகள்  நிறைந்த  வளமைகள் மிகுந்த
காட்சிகள் தலைமுறைக் காண வேண்டும்
வறட்சி மாறி வறுமை இல்லா
தாய்மண் மீண்டும் உதித்திட வேண்டும்.



# 16. நூலைப்படி...!

மானுடர் அகமும் புதிதாய் பூக்கவே
புத்தகம் எழுதினார் புவியில் சிறக்கவே
அடிகள் தோறும் கோடுகள் இட்டு
ஆழ்ந்துப் படித்தால் கலங்கரை விளக்கமே.

நடைபயிலும் மழலையாய் நூல்கள் பிடி
அறிவுப்பசி தூண்டவே அயராமல் படி
திக்கற்ற வாழ்விற்குத் திசைக்காட்டும் படி
அமைதியில்லா உள்ளம் தெளிவாகும் படி.

சிந்தனைகள் செதுக்கும் மேலான உளி
எண்ணங்கள் சீராக்கும் நூலைப் படி
கற்புநெறி வழங்கும் கருத்துடன் படி
அமிழ்தமாம் நூலின் சொற்தேன் குடி



தடைகள் வரினும் முனைந்திட வைக்கும்
பேரறிவு ஈந்து பகுத்தறியச் செய்யும்
கருத்துகள் ஊட்டி கனவுகள் தீட்டும்
வேள்விகள் கூட்டி வினைகள் புரியும்.

தெளிவுகள் அடைய தெவிட்டாது படி
தனிமையில் உறவுகள் தவிர்த்தும் படி
கம்பன் வள்ளுவன் பாரதியின் ஏடுகள்
வாழ்விற்கு அனுபவம் அளித்திடும் படி.

புதிதாய் நண்பன் தேடும் பொழுதில்
புதியதோர் புத்தகம் நீயும் படி
பக்கங்கள் சுமக்கும் வார்த்தைகள் படி
மேன்மைகள் உயர்வுகள் அடைவாய் படி.

படிக்க படிக்க வெளிச்சம் கிடைக்கும்
நூல்கள் அனைத்தும் வழிகள் கொடுக்கும்
அறியாமை அகற்றி கல்லாமைப் போக்கும்
படைப்புகள் எல்லாம் போதிமரம் தானே.



# 17. நெஞ்சில் உறுதி வேண்டும்..!

மனிதா நெஞ்சில் உறுதி வேண்டும்
அஞ்சும் நிலைகள் மாற வேண்டும்
நடுக்கம் தவிர்த்து மீள வேண்டும்
கொடுமை செய்வோர் மிதிக்க வேண்டும்.

மெல்லினம் படைத்த மாந்தர் யாவரும்
வல்லமை மிகுந்து எழ வேண்டும்
துயர்கள் விதைக்கும் அரக்கர் அவரை
எதிர்த்து வதம் செய்திடல் வேண்டும்.

பாட்டும் பரதமும் கற்பது போலே
தன்னைக் காக்கும் கலைகள் கற்பீர்
நெஞ்சில் உறுதி நித்தம் கொண்டு
மிதிக்கும் வீணரை சாய்த்திட முனைவீர்.



பெண்மைப் பறிக்கும் பகைவர் கூட்டம்
எண்ணியே நிதமும் கதறிட வேண்டும்
பெண்ணைத் தொடவோர் எண்ணம் கொள்வோர்
மண்ணில் தவிர்க்கும் உறுதி வேண்டும்.

பதுமைப் போலே வாழ்ந்தது போதும்.
புதுமைப் புகுத்திட புறப்பட்டு நீயி
எதையும் தாங்கும் இதயம் கொண்டு
எமனைத் துரத்தும் உறுதிகொள் பெண்ணே.

அனைவரும் சமமென மதிக்க வேண்டும்
இனிவரும் காலம் சமத்துவம் வேண்டும்
ஆணும் பெண்ணும் நிகரெனப் போற்ற
நெஞ்சில் உறுதி நாளும் வேண்டும்.



# 18. பயணங்கள் தொடரட்டுமே..!

நதியின் ஓரம் நாணல் ஆனேன்
விதியை நினைத்து வெறுப்புக் கொண்டேன்
கதியே என்று குழப்ப முற்றேன்
சதியோ என்னைச் சுற்றும் வலை.

துடுப்பு விரும்பா படகு ஆனேன்
படுத்த நிலையில் பரிவு வேண்டினேன்
எடுத்த செயல்கள் ஓரம் வைத்தேன்
ஒடுக்கும் வாழ்வை ஒதுக்க நினைத்தேன்.

உறவுகள் தோழர் விலகிச் செல்ல
அறுந்துத் தொங்கும் பட்டம் ஆனேன்
கரும்புச் சோலை கசக்கு மென்று
இரும்புத் திரையை இறுக்கி வைத்தேன்.



- முனைவர் தாழை.இரா.உதயநேசன்

உயிரில் கலந்த ஓவியம் அவளை
துயரில் வீழ்த்திக் கடந்து வந்தேன்
உயரும் எண்ணம் உதிக்கும் வேளை
அயர்ந்த உள்ளம் அனல் துறந்தது.

வழுவிச் சென்று வாழ்வுத் தேட
எழும்பும் இதயம் என்னுள் மறைத்து
சிந்தை மௌனச் சிறையில் மூழ்க
உந்தும் ஆற்றல் உருவ மிழந்தது.

வழித்தடம் பார்க்கத் திரும்பி நின்றேன்
விழிநீர்ப் பெருக்கில் விம்மி அழுதேன்
கூட வந்ததும் கூடவே வருவதும்
ஏதும் உண்டோ ஆய்வு செய்கிறேன்.

இறுகிய மனதில் இலக்கு வைத்து
நொறுங்கிய நெஞ்சத்தில் தேடல் பதித்து
தனிமை என்னும் கானச் சிறையில்
இனிமைப் பயணம் தொடர்கிறேன் நன்றே.



## 19. புதியதோர் உலகம் செய்வோம்..!

புதியதோர் உலகம் வேண்டி நானும்
பதிகிறேன் உள்ளக் குமுறல் இங்கே
சதிகள் செய்யும் விதியினைத் தொலைக்க
மதியும் வேண்டும் புதுயுகம் பிறக்கும்.

வீதிகள் தோறும் மயங்கிக் கிடப்பர்
பாதியில் குடும்பம் தவிக்கச் செல்வர்
வேதனைப் பெருக்கும் மதுவினை ஒழிக்கும்
புதியதோர் உலகம் புவிதனில் பிறக்கட்டும்.

சாதிக்கத் துடிக்கும் மாணவர் எவரும்
சாதிகள் பெயரில் சோதிக்கத் தூண்டும்
ஆதிக்கம் மறைந்து ஆக்கம் பெருக்கும்
நீதி நிறைந்த புதுயுகம் வேண்டும்.



- முனைவர் தாழை.இரா.உதயநேசன்

எல்லாம் இழந்து எல்லைச் செல்லும்
இல்லா மனிதரைச் சுட்டுத் தள்ளும்
பொல்லா உள்ளம் பொசுக்கித் தள்ளும்
நல்லதோர் உலகம் நானும் வேண்டுகிறேன்.

அழிவில்லாக் கல்வி அளவின்றி வேண்டும்
கொடுக்க மறுப்போர் ஒதுங்க வேண்டும்
இழிநிலை மாறி இலவசக் கல்வி
இன்பமாய்க் கிடைக்கும் புதுயுகம் வேண்டும்.

ஓலைக் கீற்றுள் பரவும் ஒளியில்
ஏழைக் குடிசை விளக்கு எரிய
கிழிந்த ஆடையில் விடியல் தேடும்
எளியவர் உயரும் உலகம் வேண்டும்.

மாற்றம் கிடைக்க மனதில் வேண்டி
ஏற்றம் காண இம்மையில் விரும்பி
தூற்றும் மாந்தர் நடுவில் மடியும்
விவசாயி விரும்பும் புதுயுகம் வேண்டும்.

இன்னும் எத்தனை இத்தரை உண்டு
எந்தன் நெஞ்சில் எரிதழல் உண்டு
மனிதம் மறந்த மானுடம் மீட்க
புனித உலகம் புதிதாய் வேண்டும்.



யுத்தம் இல்லா உலகம் வேண்டும்
அன்பு நிறைந்த அகிலம் வேண்டும்
அமைதி எங்கும் நிலவ வேண்டும்
இவ்வகை உலகம் படைப்போம் வாரீர்.





# 20. பூஞ்சோலைக் குயில்கள்..!

பூஞ்சோலை மணக்கும் பூக்கள் சிரிக்கும்
வஞ்சியின் மனம் வாசனைத் தேடும்
பூக்கும் தருணம் புன்னகை பிறக்கும்
கூவும் குயில்கள் பூஞ்சோலை வரும்.

காதல் கீதம் கானம் பாடும்
நாதம் மீட்ட நாணம் சிலிர்க்கும்
வீசும் காற்றில் வீணையின் ஓசை
கூவும் குயிலின் குரல்கள் தானோ.

மெல்லியக் காற்று மென்மை தரும்
மெல்லிடைக் கன்னி மௌனம் கலையும்
துள்ளும் இதயம் வேகம் துடிக்கும்
முகிலைக் குயில்கள் அன்புடன் அழைக்கும்.



மல்லிகைத் தோட்டம் மயக்கம் கொள்ளும்
வில்லும் அம்பும் விசைதனை மறக்கும்
சொல்லும் சொல்லின் வேகம் குறையும்
குயிலின் ஓசையில் கானகம் குலுங்கும்.

தென்றல் தழுவும் தெய்வீக நேரம்
மன்றம் மலர்ந்த பூக்கள் பேசும்
என்றும் இனிமை நிறைவாய் அளிக்கும்
குயில்கள் பாடும் பூஞ்சோலை ஓரம்.

சலசலக்கும் ஓடை நீரும் நிற்கும்
சிலுசிலு வென்றே பனியும் தழுவும்
மொத்த மலர்களும் வண்டுகள் உரசலில்
முத்தம் பெறவே குயில்கள் இசைக்கும்.

செந்நிற வானம் பொன்னாய் மின்னும்
செவ்வந்திப் பொழுது சித்திரம் வரையும்
பொன்வீணை ஒன்று பூஞ்சோலை நடுவே
பொன்னூஞ்சல் ஆடும் குயிலினம் இசைக்கவே.



# 21. பெண்மை எனும் பேராற்றல்..!

மங்கையர் இன்றேல் மனுக்குலம் ஏது
அவள் பரிசமின்றி தரணியும் ஏது
வெறுமை உலகில் புதுமை அளிக்க
இறைவனுக்கும் கிட்டா வரமாய் வந்தவள்

வீரம் விளைந்த மண்ணில் பிறந்தவள்
முறத்தால் புலியை விரட்டி அடித்தவள்
நெஞ்சை நிமிர்த்தும் வேங்கை இவள்
போர்க்களம் என்றாலும் புறப்படும் தீஇவள்.

மகிழ்வின் அதிர்வுகள் அலைபோல் தருபவள்
இரத்தமும் சதையும் கிழித்து ஈன்றவள்
அகிலத்தை ஒளிர்விக்க அன்பாய்ப் பிறந்தவள்
எக்குறை வரினும் எளிதாய் வெல்பவள்.



சங்கம் போற்றும் பெண்மை உண்டு
சிலம்பம் அதிலும் பேராற்றல் உண்டு
கண்ணகி அவளின் கோபம்  கண்டு
மதுரை  எரிந்த வரலாறும் உண்டு.

அடுப்பினை ஊதி அமைதிக் காத்தவள்
செருக்குடன் எழுந்தே ஏட்டினைச் சுமந்தாள்
முடியா  தென்ற ஒற்றைச் சொல்லை
முடித்திட வைப்பாள் விண்ணில் பறந்தும்.

காற்றாய்ப் பறந்து வெற்றிடம் நிரப்புவாள்
சூழலை மாற்றிச் சரித்திரம் எழுதுவாள்
வீழ்ச்சிகள் கண்டு வெகுண்டு எழுவாள்
வீரம் நிறைந்த மண்ணில் பிறந்தவள்.

கனவிற்கு எல்லைகள் ஏது என்பாள்
மனதிற்குள் வல்லமை விதைத்து நிற்பாள்
உணர்வுகள் மதித்து அன்பை விதைப்பாள்
இறுக்க நிலையை இன்பமாய் மாற்றுவாள்.

பெண் என்னும் பேராற்றல் மதித்து
விண்ணைத் தொட்டிடும் ஆற்றும் கொடுத்து
கண்போல் காக்க உறுதிகள் கொண்டு
பெண்மைப் போற்றி புவியில் மகிழ்வோம்.



## 22. பொறாமை குணமே..!

பொறாமை கொள்ளா மனிதன் இல்லை
பொறுமை கொள்ளும் பண்பு இல்லை
திருப்தி அடைய வழிகள் இல்லை
இயலா நிலையில் வெளிப்படும் குணமே.

அடுத்தவர் அடையும் உயரம் கண்டு
மனதில் ஏனோ கோபம் கொண்டு
தோல்விகள் வருங்கால் கற்க மறந்து
தன்னை முந்துவோர் வீழ நினைக்கும்.

பொறாமை குணமோ தீயாய்ப் பரவும்
தோழமை நட்பும் நஞ்சாய்த் தெரியும்
பொறுமை மறந்து போக்கிடம் தேடும்
மென்மை மனதை கடினம் ஆக்கும்.



உறவும் உயிரும் மதிப்பு இழக்கும்
கயமை உணர்வில் பாசம் அழியும்
அடுத்தவர் நெஞ்சில் நெருப்பை வீசும்
உற்றவர் கூட வீழ்த்திப் பேசும்.

சிந்தனை சிதைத்து சிறியவன் ஆக்கும்
இருப்பது அனைத்தும் இழந்திட வைக்கும்
புலம்பல் ஒலியில் புதைந்துப் போகும்
தளும்பும் நீராய்த் தரைதொட வைக்கும்.

கண்கள் வழியே கன்னிகள் வைக்கும்
கடும் சொற்கள் அள்ளித் தெளிக்கும்
உறக்கம் நிம்மதி தொலைக்கச் செய்யும்
பொறாமை எண்ணம் ஒழித்து மீள்வோம்.



# 23. மீண்டும் பிறந்து வா பாரதி..!

பட்டம் பெற்று சட்டம் இயற்றி
வட்டம் போடும் பெண்கள் பார்
எட்டுத் திக்கும் எழும்பி நின்று
எட்டா உயரம் தொட்டதைப் பார்.

பள்ளிச் செல்லும் பாப்பா கூட்டம்
துள்ளி ஆடும் அழகினைப் பார்
பெண்டிர் கல்வியில் பெருமை யுற்றதை
கண்ணில் பார்க்க மீண்டும் வா.

ஆணும் பெண்ணும் நிகரென நின்று
பேணும் பதவிகள் காணவே வா.
நாணம் கொண்ட நங்கை இவளும்
வானம் தொட்டதை வாழ்த்தவே வா.



சாத்திரம் அறுத்து சாதனைப் புரியும்
சூத்திரர் பெருமை சூட வா
நாத்திகம் பேசும் நாவும் இங்கே
நற்றமிழ் முழங்குது வந்து பார்.

வீரம் கொண்டு விவேகம் அறிந்து
நேரம் அறியா உழைப்பார் பார்
பேரம் பேசி பொருட்கள் வாங்கும்
மாந்தர் தம்குரல் கேட்க வா.

இயலா தென்று தவிர்த்து விடாது
முயலும் பெண்கள் முன்னே வா
தள்ளாடும் வயதில் தன்மானம் காக்க
பிழைப்பு நடத்தும் முதியோர் பார்.

அஞ்சா நெஞ்சும் அசரா மனமும்
மிஞ்சும் செயலில் உறைந்த தீரமும்
கொஞ்சும் மொழியாள் சிலம்ப ஆட்டமும்
கொஞ்சம் பார்க்கவே பிறந்து வா.

காலையில் பயில வேண்டும் என்றாய்
மாலையில் விளையாடப் பழகச் சொன்னாய்
வேளை வந்தது சீறி எழுந்தார்
காளையர் நிகரெனத் தங்கம் வென்றார்.



மழலைப் பேச்சில் பாரதி பார்.
குழந்தை நாவில் உன்பாட்டு பார்.
வளரும் கவிகள் புலமைப் பார்
உன்னைச் சொல்லும் உலகைப் பார்.

வறுமை வெல்லும் வாலிபம் பார்
குடும்பம் சுமக்கும் பொறுப்பு பார்
தொழில்கள் துவங்கும் சிறப்பு பார்
பாரதியே மீண்டும் நீவந்து பார்.



# 24. முகவரி...!

மணம் வீசுதல் மல்லிகை முகவரி
பனித்துளி இறங்குதல் மார்கழி முகவரி
ஆதவன் கதிர்கள் பகலுக்கு முகவரி
வெண்ணிலா வருகை இரவுக்கு முகவரி

காடுகள் மரங்கள் இயற்கை முகவரி
பூமித் தாயிற்குப் பசுமை முகவரி
வான்மழை வருதல் செழிப்பின் முகவரி
இதுவே இறைவன் படைப்பின் முகவரி.

வெட்க விழிகள் பெண்ணின் முகவரி
கொஞ்சிப் பேசுதல் ஆசையின் முகவரி
வஞ்சி வளையல் வாலிப முகவரி
எஞ்சி நிற்பது இன்பத்து முகவரி.



மழலைச் செல்வம் உயிரின் முகவரி
பஞ்சு விரல்கள் பாச முகவரி
மென்மைப் பாதம் மேனியின் முகவரி
உண்மை என்பது உள்ளத்து முகவரி.

பழகும் விதமே பண்பின் முகவரி
விலகிச் செல்லுதல் பிரிவின் முகவரி
துயரம் போக்குதல் துணிவின் முகவரி
உயிரைத் தருதல் நட்பின் முகவரி

உழைப்பு ஒன்றே வெற்றியின் முகவரி
பிழைக்கச் செய்வது மானுட முகவரி
இரக்கம் கொள்வது இதயத்தின் முகவரி
வறுமைப் போக்குதல் வளர்ச்சி முகவரி.

கவிதை என்பது மொழியின் முகவரி
எழுதிப் பார்ப்பது எழுதுகோல் முகவரி
உழுது விதைப்பது அகிலத்தின் முகவரி
விவசாயம் ஒன்றே தலைமுறை முகவரி.

உரிமைகள் காப்பது மனுக்குல முகவரி
கருத்துகள் ஏற்பது ஏற்றத்தின் முகவரி
முதுமையில் காப்பது இல்லற முகவரி
வந்தார் வாழ்வது தமிழன் முகவரி.



# 25. வெற்றி உனதாகட்டும் – புத்தாண்டு(ம்) புது வரவாகட்டும்..!

பழையனக் கடந்துப் புதியன புகுந்து
புத்தம் புதியதோர் மனிதனாய்ப் பிறந்து
இன்னல் இடர்கள் அனைத்தும் கரைந்து
புதுமைகள் அளிக்கும் புத்தாண்டே வருக.

முயற்சிகள் செய்து உயர்ந்து நில்
இகழ்ச்சிகள் என்றும் உதறித் தள்
வானம் வசப்படும் உறுதி கொள்
புத்தாண்டில் புதுவரவு நம்பிக்கை கொள்.

கனவுகள் பெருகும் நினைவுகள் மிளிரும்
உறவுகள் இணைய உற்சாகம் பிறக்கும்
புதிய வருடம் புத்துயிர் அளிக்கும்
புதுமைகள் உண்டு புத்தாண்டு வாசலில்.



எண்ணம் வெல்லும் சிந்தனை உயரும்
மனதின் ஆசைகள் வடிவம் கொள்ளும்
பகலவன் கதிரும் பனித்துளி தெளிக்கும்
புத்தாண்டு என்றும் உன்னை வாழ்த்தும்.

தீயதை வெறுத்திடு நல்லதை உயர்திரு
மனித நேயமும் நலமுடன் வளர்த்திடு
எல்லோர் வாழ்வில் மகிழ்ச்சி விதைத்திடு
புத்தாண்டில் உந்தன் வாழ்வு சிறக்கட்டும்.



# 26. இயற்கையை காத்திட்டால்..!

கடவுள் கொடையிது இயற்கை அன்னை
காக்கவே பிறந்தோம் என்றே முழங்கு
சிந்தனை நிறுத்த மறந்து சிதைக்க
நிந்தனை ஏற்றோம் என்றே உணர்.

நவீன மோகம் வளர்ச்சி என்றோம்
விலையின்றி வியாதிகள் வழிய கொண்டோம்
சிதையில் துடித்த இயற்கை நம்ம
வதைக்கும் வகைகள் வகுத்துக் கொடுத்தோம்

பிணிகள் வந்தால் மருந்தாய் நிற்கும்
இயற்கை அருமை அடியுடன் மறக்க
செயற்கை உபாதை செடிபோல் வளர்ந்து
தொல்லைக் கொடுக்கத் துவண்டு நிற்கிறோம்.



இரைச்சல் மிகுதியும் வாகனப் புகையும்
உயிர்க் காற்றில் ஒன்றாய்க் கலக்க
உயிர் மூச்சையும் விலைக்கு வாங்கும்
இழிநிலை அடைந்தோம் விழித்திடு மனிதா.

மரங்கள் வேருடன் பிடுங்கி அழித்து
ஓசோன் படலம் ஓட்டைகள் கொடுத்து
மும்மாரிப் பொய்க்க வறண்ட நதிகள்
அவலம் கண்டு விழித்திடு மனிதா.

உயிர்கள் மதிக்க கற்றவர் நாமே
பயிர்கள் விதைப்பை சொன்னவர் நாமே
எல்லாம் மறந்த மனிதர் நாமே
இன்னும் இயற்கைப் பொறுக்குமா சொல்.

கருத்துடன் குடிநீர் செலவிட மறந்தோம்
ஆறு குளங்கள் பேணிட மறந்தோம்
விவசாயம் பெரிதென நினைக்க மறந்தோம்
விளைச்சலுக்கு விலைவிதிக்கும் உரிமை இழந்தோம்.

கானல் நீராகக் கலைந்துச் செல்லாது
வேகம் கொண்டே இயற்கை காப்போம்
வானம் மும்மாரி வேண்டி நிற்போம்
இயற்கை உலகை போற்றி மகிழ்வோம்.



# 27. என் பார்வையில் பாரதி..!

செந்தமிழ் கண்ட செம்மொழிப் புலவன்
பைந்தமிழ் மொழியில் பாட்டுகள் இசைத்தவன்
நம்மில் ஒருவனாய் நம்மில் இணைந்தவன்
சிம்மக் குரலில் சீறிப் பாய்ந்தவன்.

காலம் கடந்தும் கானம் பாடி
ஆலம் விழுதாய் அகிலத்தில் நிலைத்தவன்
வேட்கை மிகுந்த வேங்கை அவன்
பாட்டிலே சுதந்திர தாகம் விதைத்தவன்.

முறுக்கு மீசையும் முண்டாசு பிம்பமும்
புருவம் உயர்த்தும் – போர்க் குணமும்
சமூகச் சிந்தனை சமத்துவ போதனை
நிலைத்திட அழைக்கும் அழைப்பிதழ் இவன்.



ரௌத்திரம் பழகிட முனைப்புடன் அழைத்து
மென்மைக் குணங்கள் மேலோங்கி நின்றவன்
காதலின் சாரம் முற்றும் அறிந்தவன்
கண்ணம்மா அவளின் நிரந்தரக் காதலன்

நெரித்த திரைக்கடலில் நின்முகம் கண்டேன்
திரித்த நுரையிலும் உன்முகம் கண்டேன்
என்றே காதலை எண்ணித் திளைத்தவன்
மாறாக் காதலின் காவியம் ஆனவன்

வெள்ளிப் பனிமலை மீது உலாவி
கடல் முழுதும் கப்பல் விட்டு
பாரத தேசமென தோள் தட்டி
வீரமுடன் உரைத்த தீர்க்கன் அவன்.

எங்கும் எதிலும் எல்லோர் மனதிலும்
உந்தன் உருவம் பதித்து வைத்தோம்
கண்முன் நிற்கும் கண்ணாடி திரையிலும்
நின்முகம் பார்த்து நிம்மதி கொள்வோம்.



## 28. கவிதையாய் வாழ...!!

கொஞ்சம் பொய்யும் கொஞ்சம் மெய்யும்
கொஞ்சிப் பேசி குலாவும் மொழியும்
சத்தம் இல்லா யுத்தமும் நடத்தி
நித்தம் அனுபவம் அளித்திடும் வாழ்க்கை.

கடமைகள் சுமந்து கண்ணீர் மறைத்து
தடம் பதித்தோம் தன்னல வாழ்வில்
கவிதைகள் வடித்தும் கதைகள் படித்தும்
கவிகளின் எளிமையை எளிதாய் மறந்தோம்.

இன்பமும் துன்பமும் இகத்தினில் உண்டு
இன்முகம் கொண்டு இயல்பாய் நடந்து
இலக்குகள் தெளிவாய் இதயத்தில் பதித்து
கவிதையாய் வாழ்தல் இத்தரை நன்று.



- முனைவர் தாழை.இரா.உதயநேசன்

மலரும் பூக்கள் போலே சிரிக்கலாம்
சிங்கார வானில் சிறகடித்துப் பறக்கலாம்
தேனீக்கள் கூட்டமாய் ஓயாது உழைக்கலாம்
ரீங்கார கவிதையிலே வாழ்வை நிறுத்தலாம்.

முயற்சிகள் நம்பி உழைப்பை விதைக்கலாம்
நம்பிக்கை ஒன்றை மூலதனம் ஆக்கலாம்
எதிர்வரும் தடைகள் உடைத்துப் பழகலாம்
கவிதையின் அழகில் உலகை ரசிக்கலாம்.

கூடி வாழும் காகம் போல
தேடி உறவுகள் தினமும் அணைப்போம்
அன்பும் பண்பும் அறமும் விதைத்து
எதுகை மோனையாய் சேர்ந்து வாழ்வோம்

பன்னீர்த் துளிகளாய் வாசம் பரப்பி
பணிவு பாசம் பாங்காய் வளர்ப்போம்
வீணையின் இசையாய் இனிமையாய்ப் பேசி
கவிதை மரபுகள் துடிப்புடன் சொல்வோம்.

கம்பன் வள்ளுவன் வழிதனில் நடப்போம்
பாரதி போலே கவித்துவம் படைப்போம்
வாழ்வே கவிதை என்று முழங்குவோம்
வியத்தகு வெற்றியில் விண்ணை மூட்டுவோம்.



# 29. தமிழ் எங்கள் பிறவிக்குத் தாய்..!

உயிரின் மொழி உலகச் செம்மொழி
பயிர்போல் வளர்ந்தப் பைந்தமிழ் மொழி
அமுதும் தேனும் அனுதினம் ஊட்டி
சமுதாயம் வளர்க்கும் சங்கத் தமிழ்.

அறிவும் செறிவும் அன்பும் அறனும்
சிறிதும் குறையாது சீருடன் அளித்து
உயர்வுக்கு வழிகாட்டி உழைப்பிற்கு வேராகி
அயராமல் என்றும் ஆளும் மொழி.

உணர்வு உரிமை உள்ளத்தில் எழுப்பும்
மணம் வீச வழிதனைக் கொடுக்கும்
மதுபோல் மயக்கி மனதில் நிலைக்கும்
இதுபோல் மொழியும் இங்கேதும் உண்டோ?



கவிதையும் காதலும் கருத்தும் எழுத்தும்
குவியலாய்க் கொண்ட குறையில்லா மொழி
உள்ளத்தில் வேள்வியும் உயரமாம் வெற்றியும்
அள்ளிக் கொடுத்து அணைக்கும் மொழி.

இளமையும் முதுமையும் இனிதாய் நேசிக்கும்
வளமைக் கொண்ட வானுயர்த் தமிழே
புகழும் பெருமையும் புலவர்க்குத் தந்து
அகத்திலே நிறைந்த ஆசைத்தமிழ் வாழ்கவே

பாரதி அவனும் பாரதி தாசனும்
வள்ளுவன் கம்பனும் வளர்த்த மொழி
மண்ணும் மொழியும் அன்னையாய்ப் போற்றும்
தமிழர் எமக்குத் தாயும் நீயே.



# 30. இருட்டறையில் உள்ளதடா உலகம்..!

கருவறை வாசம் கண்மூடி தூக்கம்
இருட்டறை மாதங்கள் இன்பங்கள் கொடுக்கும்
புதிதாகப் பிறந்த புவிதனில் ஏனோ
விதியின்  காரிருள் விலகாமல் நிற்குது.

உழைக்கும் வர்க்கம் உயிர்நாடி துடிக்க
பிழைக்கிறார் இங்கே பணக்காரர் மட்டும்
கொரோனா எதிரியின்  கோரமுகம் கண்டும்
அதிலும் அரசியல் - அவலம் அன்றோ?

கொடுமை நடப்பின் இமைகள் மூடினோம்
உதவிடும் மனதைப் புதைத்து விட்டோம்
தன்னலம் ஒன்றில் தனியாய்ச் சுற்றி
பொதுநலம் என்றோர் சொல்லை மறந்தோம்.



கல்விப் பெரிதென சுமைகள் ஏற்றி
வளரும் பருவ ஏக்கம் உடைத்தோம்
நம்மின் விருப்பம் அவரில் சுமத்தி
முளைக்கும் நேரம் வேருடன் அழித்தோம்.

வயல்வெளிப் பறித்து சாலை அமைத்தார்
சுங்கம் என்று சுரண்டி மகிழ்ந்தார்
பதவிகள் இலக்காய்க் கொண்டவர் நடுவே
இருள்சூழ் உலகம் வெளிச்சம் காணுமோ?

இருளின் பிடிதனை இன்றே உணர்வோம்
ஒற்றுமை ஓங்க ஒன்றாய் இணைவோம்
சொல்லிலும் செயலிலும் உரிமைகள் மீட்டு
இருளின் ஆதிக்கம் உடைத்து எறிவோம்.



# 31. மேகக் கூட்டம்...!

வானம் ஈன்ற வெள்ளை முத்து
தானமாய் மழைநீர் வழங்கும் வள்ளல்
நீரைச் சுமக்கும் நத்தைக் கூடுகள்
வேரை நனைக்கும் வெண்ணிற முகில்கள்.

நீலவானம் மீதிலே நின்றாடும் பஞ்சுகள்
ஆழும் இலையாய்ப் பறக்கும் இழைகள்
வீதிகள் தோறும் சத்தம் எழுப்பும்
வேகக் காற்றில் முகம் கருக்கும்.

வட்ட வானின் வாகனக் கூட்டம்
பட்டுத் துணிபோல் விரியும் விரிப்பு
இடிகள் தாங்கும் கோட்டைச் சுவர்கள்
விடியும் வேளை விரிந்துப் பறக்கும்.



வெண்மை நிறத்து அதிசயப் பரப்பு
விண்மீன் ரசிக்கும் வெள்ளிக் கிண்ணம்
தொலைவில் இருந்தும் தொடர்பு கொள்ளும்
அலையெனக் காற்றில் அழகாய்த் துடிக்கும்.

மழைநீர் வடிவில் மண்ணில் இறங்கி
அழைக்கும் மனிதன் நலம் கேட்கும்
கண்கள் பார்க்கக் கலைந்துச் சென்று
விரும்பும் வடிவில் வளைந்து நிற்கும்.

மயிலின் தொகையில் கருமை கொள்ளும்
உயிரில் கலந்து உவமை கொடுக்கும்
எழுத்து வடிவில் கவிகள் தரும்
எழுது கோலின் மைபோல் மிளிரும்.

தலைக்கு மேலே தாளம் போடும்
விலைக்கு கேட்டால் விலகி ஓடும்
மலையைத் தீண்டி வம்புகள் செய்யும்
கலையின் நளினம் கொண்டு ஆடும்.

தூரம் தேசத்து தூயச் சொந்தங்கள்
நேரம் நெருங்க மழைதரும் குமிழிகள்
பாரில் இறங்கும் பரிவு உருவங்கள்
தேரில் உலாவரும் திவ்விய மேகங்கள்.



# 32. கவிகளின் அரசன் கண்ணதாசன்...!

புவிதனில் பூத்த புதுமை இவன்
கவியில் சிறந்த கவிஞன் இவன்.

தத்துவம் சொல்லும் மகத்துவ மிக்கவன்
தமிழர் மனதில் ஆழப் பதிந்தவன்.

காதலைக் கவியில் கொட்டித் தீர்த்தவன்
உயிரில் உணர்வை கலக்க வைத்தவன்

வெற்றிப் படிகள் வென்று நின்றவன்
சுற்றும் பூமிக்குச் சூரியன் ஆனவன்.

உயிர்மெய் எழுத்தின் உணர்வுச் சோலை
முத்தையா என்னும் வித்தகன் இவனே.



படைத்த படைப்பில் பாரினை ஆண்டவன்
தாய்மொழித் தேரில் உலா வருபவன்.

அகிலம் போற்றும் அதிசயப் பிறவி
முரசுகள் கொட்டும் வித்தகன் நீ.

உணர்ச்சிக் கடலே கவிதைக் கடவுளே
உணர்வுக் குவியலில் முத்துகள் எடுத்தவனே.

மண்ணின் பெருமை மாண்புறச் செய்தாய்
பண்ணும் பாட்டும் உயிர்பெறச் செய்தாய்.

பண்படும் சோகக் கீதங்கள் தந்தாய்
விண்ணை இறக்கும் வித்தை கற்றாய்.

கற்பனைக் கொஞ்சம் அறியாத வள்ளல்
சொற்கள் அனைத்தும் உணர்ச்சியில் துள்ளும்.

விஞ்சி உன்னை வெல்வார் இல்லை
கவிகளின் அரசனுக்கு ஈடேதும் இல்லை.



# 33. என் அம்மா

கருவில் சுமந்து கண்போல் காத்து
உருவம் கொடுத்த உன்னத தெய்வம்
கண்ணின் மணியாய் காலமும் காக்கும்
மண்ணின் பெருமை கொண்டவள் அம்மா

வளரும் நொடிகள் கண்டு சிரிப்பாள்
உணவுகள் ஊட்டி உள்ளம் மகிழ்வாள்
வியாதியின் நேரம் விழித்து இருப்பாள்
தன்பசி மறந்து தவித்துக் கிடப்பாள்

நிலவினைக் காட்டி கதைகள் சொல்லி
உலகில் எனக்கு முகவரி தந்தாள்
துக்கம் மறைத்து  தூக்கம் மறந்து
தூளிகள் ஆட்டி தன்முகம் மலர்வாள்



- முனைவர் தாழை.இரா.உதயநேசன்

தவழ்ந்து தவழ்ந்து நடக்க முயலும்
குழந்தை விரல்கள் பிடித்துக் கொள்வாள்
கொஞ்சிப் பேசும் மழலைத் தமிழில்
நெஞ்சம் முழுதும் ஆனந்தம் கொள்வாள்

பள்ளிக்கு அனுப்பிப் படியோரம் காத்திருந்து
துள்ளிக் குதிக்கும் பிள்ளையில் மகிழ்ந்து
அள்ளி அணைத்து ஆசையாய்ப் பேசி
தன்பிள்ளை அறிவாளி என்றே கொஞ்சுவாள்

அம்மா என்பதும் அதிசயம் அன்றோ
உலக அதிசயம் வேறேதும் உண்டோ
கேளாமல் வரங்கள் வாரி இறைக்கும்
அவளுக்கு இணையான தெய்வங்கள் உண்டோ

தியாகம் நிறைந்தவள் பம்பரமாய்ச் சுழலுவாள்
மழையும் வெயிலும் பாராது உழைப்பாள்
வஞ்சமும் வெறுப்பும் உள்ளத்தில் வையாது
மஞ்சத்தின் பரிசை நெஞ்சத்தில் சுமப்பாள்

கணவனே தெய்வமென காலமும் நினைப்பாள்
பணிவிடை செய்தே பாசத்தை வளர்ப்பாள்
அல்லும் பகலும் தேவைகள் அறிந்து
அயராது செய்யும் அவளுக்கு ஈடுண்டோ



உறவுகள் வரவேற்று இன்புற்று மகிழ்வாள்
அறமும் குணமும் சிறந்து விளங்குவாள்
அறுசுவை உணவுகள் சமைத்து அளிப்பாள்
உற்றவர் உள்ளம் குளிர வைப்பாள்

கண்ணீர் துடைத்து கவலைகள் போக்கி
மண்ணும் கண்ணில் விழாது காத்து
உயிர்தனைக் காக்கும் நல்லதோர் மருந்தாய்
வலிகள் மறந்து பிள்ளைக் காப்பாள்.

அறிவைப் போதிக்கும் ஆசான் அவள்
வாழ்வின் பாடங்கள் அழகாய்ச் சொல்வாள்
தன்னலம் மறந்து ஆசைகள் துறந்து
தத்தம் செய்வாள் தன் வாழ்வையே

ஆயிரம் விண்மீன் சூழ்ந்து நிற்பினும்
நிலவினைத் தேடும் கண்கள் போல
ஆயிரம் உறவுகள் அருகில் இருந்தும்
அம்மா உன்னையே மனம் தேடுமே

வாழ்வின் வசதிகள் மலைபோல் பெருக
பொன்னும் பொருளும் பொழுதும் குவித்து
செயற்கை வழியில் தேடும் சொர்க்கம்
தாய்மடி ஒன்றிலே சுகமாய்க் கிடைக்கும்



தாயின் அன்பை மறவாது வாழ்வோம்
ஒற்றை அறையில் ஒதுக்காது இருப்போம்
அவளின் முகத்தை சிரிப்புடன் வைப்போம்
சிந்தையில் அவளின் முகத்தைப் பதிப்போம்

ஈடேதும் இல்லை இணையேதும் இல்லை
ஈன்றவள் அவளிடம் பிழையேதும் இல்லை
ஆவலாய் அவளின் அருமைகள் அறிந்து
ஆசையாய் சொல்வோம் – அம்மா வாழ்கவே



## நூலாசிரியரின் நூல்கள்:

தமிழே விதையாய் – கவிதைத் தொகுப்பு
செவத்த இலை – சிறுகதைத் தொகுப்பு
மர்மங்களின் மறுபக்கம் – சிறுகதைத் தொகுப்பு
கலைக்கப்பட்ட கனவுகள் – சிறுகதைத் தொகுப்பு
தொடுவானம் – சிறுகதைத் தொகுப்பு
பூவோடு பேசும் பூஞ்சிட்டு – கவிதைத் தொகுப்பு
மலரே மௌனமா – கவிதைத் தொகுப்பு
சுகமான சுமைகள் – சிறுகதைத் தொகுப்பு
விடை தேடும் விடியல் – கவிதைத் தொகுப்பு
எண்ணமே ஏற்றம் தரும் – கவிதைத் தொகுப்பு
எரிதழல் கொண்டு வா – கவிதைத் தொகுப்பு

## ஆங்கில நூல்கள்( பதிப்பில்):

"Sparrow whispers to floret" -
"Why does the flower maintain silence"
"Tamil is my root "
"The other side of Enigma"
"Delightful Burdens"
"Horizon"
" Discovering Response from Dawn"
" Faded dreams"
" Bloody leaf"






**வெளியீடு / புத்தகம் கிடைக்குமிடம்**

கலை உதயம் பதிப்பகம்
எண்:10, முதல் தெரு, ஸ்ரீராமபுரம்,
ஆம்பூர்–635802.
திருப்பத்தூர் மாவட்டம்.தமிழ்நாடு
தொடர்புக்கு: 95978 64183
E.Mail : kalaiudhayampublisher@gmail.com